# டெஸ்மன்ட் டூடு
# சமாதானத்தின் பாதிரியார்

## கரோல் கிரீன்



டெஸ்மன்ட் டூடு

அமைதியின் பாதிரியார்

கரோல் கிரீன்

சில்ட்ரன் பதிப்பகம்

ஷிகாகோ



*“தென் ஆப்பிரிக்காவின் நிறவெறியை உலகத்தின் கவனத்திற்குக் கொண்டுவர என் நோபெல் பரிசு உதவும் என நம்புகிறேன்” என்று டெஸ்மன்ட் பத்திரிகையாளர் கூட்டத்தில் கூறினார்.*

*நார்வேயின் தலைநகரமான ஆஸ்லோ டிசம்பர் 1984–ல் மிகவும்* **குளிர்ச்சிகரமாக இருக்கும்** *என்பது பாதிரியாருக்கு தெரிந்ததுதான். ஆனால் தானும், தன்னை அழைத்தவர்களும்* **தொண்ணூறு நிமிடங்கள் வெளியில் நிற்க நேரிடும் என்று அவர் சற்றும் எதிர் பார்க்கவில்லை.**

**நோபெல் பரிசைப் பெற்று கொள்வதற்காக அவர் கூட்டத்திற்கு சென்றிருந்தார். ஆனால், கடைசி நேரத்தில் குண்டு வெடி அச்சுறுத்தல் வந்திருந்தது. பாதிரியாரையும் கூட்ட அறையையும் தகர்த்துவிடப் போவதாக பயமுறுத்தல் கிடைத்திருந்தது.**



வெடிகுண்டு பயமுறுத்தலின் கலவரத்திற்குப் பிறகு டெஸ்மன்ட் தன் மனைவி லியா டூடு மற்றும் நோபெல் பரிசு குழுவினர்களுடன் ஆஸ்லோ பல்கலைக்கழகத்தின் படிகளில்.

“எங்களுக்கு விரொதமாக செயல்படுபவர்களின் துளைச்சளைதான் இது வெளிப்படுத்துகிறது” என்றார் பாதிரியார் டூடு.

காவல் துறையினர் கூட்ட அறையை நன்றாக தேடிபார்த்து, வெடிகுடண்டு இல்லை என்று உறுதி செய்த பிறகு யாவரும் உள்ளே சென்றார்கள். பாதிரியார் டூடு நோபெல் பரிசைப் பெற்றுக் கொண்டார். அவர் மிக் உற்சாகத்துடன் இருந்த போதும் வருத்தமும் அடைந்தார்.

.

”தெற்கு ஆப்பிரிக்காவில் நீதி இன்மையால் அமைதியும் இல்லை”, என்று பாதிரியார் டூடு சொன்னார். பாதிரியார் டூடு, அந்நாட்டில் நீதி, அமைதி இவற்றுக்காக பல ஆண்டுகள் செலவிட்டிருந்தார். உழைப்பிற்காக உலகத்தின் பல இடங்களிலிருந்து விருதுகளும் கௌரவப் பட்டங்களும் அடைதிருந்தார் அவர். ஆனால் தனது பணிக்காக அவர் செய்ய வேண்டியது நிறையவே இருந்தது.

டெஸ்மாண்ட் இம்பிலோ டூடு 1931 அக்டோபர் 21-ம் தேதியில் பிறந்தார். அவருடைய தந்தை ஸகாரியா ஒரு மெதாடிஸ்ட் பள்ளியில் ஆசிரியராகவும், தாய் ஒரு ஊழியராகவும் இருந்தார்கள். இவர்கள் தென் ஆப்பிரிக்காவில் ட்ரான்ஸ்வால் என்கிற மாகாணத்தில் தங்க சுரங்கத்திற்குப் பெயர் போன க்லெர்க்ஸ்ட்ராப் என்ற நகரத்தில் வசித்து வந்தார்கள்.

டெஸ்மன்ட் குழந்தையாக இருந்த போது பிழைப்பாரோ என்ற நிலையில்  மிகவும் பலவீனமாக இருந்தார். ஆனால் அவருடைய பாட்டியார் அவருடைய பெயரின் நடுவில் ம்பிலோ என்ற பெயரை சேர்த்தார். புன்டு மொழியில் இதன் பொருள் “உயிர்”. டெஸ்மான்ட் பிழைத்தார்.

அவர் சிறு வயதிலிருந்தே சில கடினமான உண்மைகளைப் புரிந்துக் கொண்டார். தென் ஆப்பிரிக்க குடிமக்களில் கருப்பு இனத்தவர்கள் எழுவது சதவிகிதம் என்றாலும் அவர்களுக்கு தேசிய தேர்தல்களில் வாக்கு உரிமை கிடையாது. அவர்கள் விருப்பப்படி எங்கு வேண்டுமானாலும் வாழவோ, நிலத்தை வாங்கவோ உரிமை இல்லை. தங்களுக்கு வேண்டியபடி ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடம் மாறுவதற்குக் கூட அவர்களுக்கு சுதந்திரம் கிடையாது. ஆனால் அரசாங்கம் அவர்களை எந்த நேரத்திலும் இடம் பெயர்த்துவிடலாம். வெள்ளையர்களின் குழந்தைகளுக்கு பள்ளியில் இலவச உணவு அளிக்கப்பட்டது. எனினும் வீட்டிலிருந்து வரும் சாப்பாட்டைவிரும்பியதால் பலமுறை இலவச உணவை தூக்கி எறிந்தார்கள் என்பதையும் அறிந்துக் கொண்டார் டெஸ்மன்ட்..

ஜோஹன்னஸ்பர்கின் தெற்குப்பகுதியில், பெரும்பாலும் கருப்பர்கள் குடியிருந்த ஷார்ப்வீல் என்ற நகரத்தில் 1960-ல் இந்த கூட்டம் கூடியது. பதினாறு வயதிற்கு மேல் உள்ள தென் ஆப்பிரிக்கக் கருப்பர்கள் யாவரும், தாங்கள் வசிக்கும் இடமும் வேலை செய்யும் இடமும் குறிப்பிடப்பட்ட கைப்புத்தகம் ஒன்றை வைத்திருக்க வேண்டும் என்ற சட்டத்திற்கு எதிராக போராட ஒன்று சேர்ந்தார்கள். வெள்ளையர்கள் ஆட்சி செய்த எல்லைக்குள் சுதந்திரமாக இவர்கள் நடமாடுவதை தடுப்பதற்காகவே இவ்வகையான சட்டங்களை அதிகாரிகள் அமுலுக்குக் கொண்டுவந்திருத்தார்கள். இந்த படம் எடுத்த சில நேரத்திற்குள் காவல் அதிகாரிகள் வந்து துப்பாக்கியால் சுட ஆரம்பித்து விட்டார்கள். இதனால் அறுபது நபர்கள் இறந்ததுடன் நூற்றுக் கணக்கானவர்கள் காயமடைந்தார்கள்.



இந்த படத்தில் ஜோஹன்னஸ்பர்க் சுரங்கத்தில் ஆறு மாதங்கள் வேலை செய்ய போகும் ஒரு கருப்பரின் கைப்புத்தகத்தை பரிசீலனை செய்கிறார்கள். இந்த கைப்புத்தக சட்டம் 1986-ல் தான் மாற்றப்பட்டது.



மிஷன் பள்ளியில் இன்று தான் கருப்பர்களின் கடைசி தினம். வெள்ளையர்களுக்குக் கிடைக்கும் அதே கல்வி கருப்பர்களுக்கும் கற்பிக்கக் கூடாது என்ற அரசாங்காத்தின் சட்டத்தை மிஷன் பள்ளிகள் அங்கீகரிக்க மறுத்து, பள்ளிகளை மூடிவிட்டார்கள்.

கருப்பர்கள் குப்பைத் தொட்டியை சுற்றி கும்பலாகக் கூடுவதை டெஸ்மன்ட் கவனித்தார். வெள்ளையர்களின் குழந்தைகளுக்குக் கிடைத்த இலவச மதிய உணவு அவர்களுக்குக் கிடைக்காததால் அந்த குழந்தைகள் விட்டெறிந்த உணவை சாப்பிட்டுக்கொண்டு இருந்தார்கள்.



ஜோஹன்னஸ்பர்கில் குச்சுவீடுகள் நிறைந்த கருப்பர்கள் வசித்துவந்த பகுதி, சின்ன பட்டிணமான ஸோஃபியாவின் மத்தியில் இருந்தது. பின்னணியில் 'க்ரைஸ்ட் த கிங்' என்கிற சரச்சில் 'ஏன்ஜிலிகன்' என்ற சமூகத்தின் பாதிரியார்களால் பராமரிக்கப்பட்டு வந்தது.

டெஸ்மன்ட் குடும்பம் அவருடைய பன்னிரெண்டாம் வயதில் பெரு நகரமான ஜோஹன்னஸ்பர்கிற்கு மாறி வந்தது. குருடர்களின் மிஷினரி பள்ளியில் அவருடைய தாய் சமையல்பணி செய்து வந்தார். அந்த பள்ளியில், ஒருவருக்கு ஒருவர் உதவி செய்துகொண்டு ஆதரவாக இருப்பதை கவனித்தார். அது அவரை ஆழமாக நெகிழவவைத்தது. ஒரு நாள் தானும் மற்றவர்களுக்கு உதவவேண்டும் என்று தீர்மானித்தார்.

ஒரு நாள் டெஸ்மன்ட் தன் தாயுடன் இருந்த போது ட்ரெவர் ஹட்ல்ஸ்டன் என்ற ஒரு வெள்ளையர் இவர்களைக் கடந்து சென்றார். ஜோஹன்னஸ்பர்கில் கருப்பர்கள் வசித்து வந்த ஸோஃபியா எனப்படும் பகுதியில் வேலை செய்து கொண்டிருந்த ஒரு ஏன்ஜிலிகன் பாதிரியார் அவர். தனது தொப்பியை தாயார் டூடு-விற்கு மரியாதை செலுத்தும் அடையாளமாகக் கழற்றினார். தென் ஆப்பிரிக்காவில், ஏழை கருப்பு தொழிலாள பெண்களுக்கு வெள்ளையர்கள் இவ்விதமான மரியாதை செலுத்துவதில்லை என்பதால் டெஸ்மன்ட் இந்த எதிர்பாராத செய்கை கண்டு திகைத்துப் போனார்.

இந்த அனுபவத்திலிருந்து, தான் கருப்பர் என்பதற்காக வெட்கப்பட வேண்டாம் என்றும், மாறாக அவர்கள் வெள்ளையர்களுக்கு சமமானவர்கள் என்றும் புரிந்துக் கொண்டார்.

ஜோஹன்னஸ்பர்கில் வேலை செய்து கொண்டிருந்த கருப்பர்கள் சின்ன பட்டிணமான ஸோஃபியாவில் நெரிசலான சிறிய குடிசைகளில் குடியிருந்தர்கள்(மேலே). இன ஒதுக்கீட்டு கொள்கையின்படி சேரிகளை சிதைத்து புதிய சுத்தமான வீடுகள் கட்டப்பட்டன (கீழே). ஆனால் இவர்கள் செல்லும் பேருந்தில் வேலைக்கு சென்று வர பல மணி நேரங்கள் ஆயிற்று.

டெஸ்மன்ட் 1945-ல் மடிபேன் உயர்நிலை பள்ளிக்குச் சென்றார். ரயில் ஸ்டேஷனில் வேர்கடலை விற்றும், கோல்ஃப் மைதானத்தில் சாமான்களைச் சுமந்தும் பொருள் ஈட்டினார். பள்ளிப்படிப்பு முடிந்ததும் தான் ஒரு மருத்துவராக வேண்டும் என்று விரும்பினார்; ஆனால் அதற்கு பணம் அதிகம் தேவைப்படும் என்பதால் டெஸ்மன்ட் ப்ரெடோரியாவில் பன்டு நார்மல் கல்லூரியில் படித்து ஆசிரியராக முடிவு செய்தார்.

அந்த கட்டத்தில் அவர் காசநோயால் பீடிக்கப்பட்டு மருத்துவமனையில் இருபது மாதங்கள் இருக்க நேர்ந்தது. இப்போது எப்படி கல்வி பயல முடியும் என்று திகைத்தார்.

தினமும் பாதிரியார் ஹட்ல்ஸ்டன் அவரை பார்க்க வந்தார். அவர் படிப்பதற்குப் புத்தகங்கள் கொண்டுவந்து அவருடன் அளவளாவிக் கொண்டிருப்பார். டெஸ்மன்ட் தான் படிப்பை முடித்துவிடலாம் என்ற நம்பிக்கையுடனே இருந்தார்; பாதிரியாரை உற்சாகப்படுத்தினார்.






கருப்பர்கள் பஸ்ஸின் கட்டண உயர்வை எதிர்த்து 1957-ல் அதைபுறக்கணித்தார்கள். கால்நடை உட்பட மற்ற போக்குவரத்து சாதனங்களை அவர்கள் பயன்படுத்தலானார்கள்.

டெஸ்மன்ட் 1954 – ல் மடிபேன் உயர்நிலை பள்ளியின் ஆசிரியரானார். பிறகு குர்கர்ஸ்ட்ராப் முன்சிவீல் உயர்நிலை பள்ளியில் கற்றுக் கொடுத்தார். 1955-ல் லி நோமாலிஸோவை திருமணம் செய்து கொண்டார். மூன்று பெண்கள், ஒரு பையன் என அவர்களுக்கு நான்கு குழந்தைகள். ஹட்ல்ஸ்டன் ஞாபகார்த்தமாக ஆண்பிள்ளைக்கு ட்ரெவர் என்று பெயரிட்டார்கள்.

அரசாங்கம் 1957-ல் இனி வெள்ளையர்களுக்குக் கிடைக்கும் அதே கல்வி கருப்பர்களுக்குக் கிடைக்காது என்றும், பன்டு கல்விதான் கற்க வேண்டும் என்றும் முடிவெடுத்தது. அநேக ஆசிரியர்கள், டெஸ்மன்ட் டூடு உள்பட, இதை அங்கீகரிக்காமல் எதிர்த்து தங்கள் வேலையை ராஜினாமா செய்தார்கள்.

மறுபடியும் அவர் வாழ்வின் திசை மாறிற்று; ஆன்கிலிகன் சர்ச்சில் சேர்ந்து, 1961-ல் பாதிரியாராக நியமிக்கப்பட்டார்.

முதலில் பாதிரியார் டூடு தென்ஆப்பிரிக்காவில் ஒரு சர்ச்சில் இருந்தார்.பிறகு 1962-ல் தன் குடும்பத்துடன் இங்கிலாந்திற்கு சென்று அங்கு லண்டனில் கிங்க்ஸ் கல்லூரியில் படித்தார். பல சர்ச்களில் வேலை செய்தார.

டூடு குடும்பம் 1967-ல் தென் ஆப்பிரிக்காவிற்கு திரும்பி வந்தார்கள். பாதிரியார் டூடு முதலில் *ஃபெடரல் தியோலோஜிகல் கல்லூரியிலும் பிறகு லொசோதோ நேஷனல் பல்கலைக் கழகத்திலும் கற்றுக் கொடுத்தார்.*



*பலருக்கும்* ஜோஹன்னஸ்பர்க் ஒரு பொன் நகரமாக அமைந்தது; வெள்ளையர்களின் கட்டுப்பாட்டில் இருந்த அந்த செல்வம் ஜோஹன்னஸ்பர்க் *அருகில் அமைந்திருந்த தங்க, வைர, யுரேனியம் சுரங்கங்களிலிருநது எடுக்கப்பட்ட செல்வம்.*

பிறகு 1972-*ல் பாதிரியார் டூடு இங்கிலாந்திற்குத் திரும்பி உதவி பணத்துடன் 'வேர்ல்ட் கௌனஸில் ஆ்ஃப் சர்ச்சஸில் வேலை செய்தார்.*

*ஆனால், 1975-ல் அவர்* ஜோஹன்னஸ்பர்க் ஆங்கிலிகன் அதிகாரியாக தேர்ந்தெடுக்கப்பட்டு, ஆங்கிலிகன் சர்ச்சின் முதல் கருப்பு அதிகாரியானார்.

ஜோஹன்னஸ்பர்க்கில் இருந்து 15 மைல் தூரத்தில் உள்ள சோவெட்டோ வட்டாராத்தில் நடந்த ஆர்ப்பாட்டத்தின் இரண்டாம் நாளில் கலகக்காரர்கள் பலாத்காரமாக பேருந்தை எரிக்கலானார்கள். கருப்பினத்தவர்கள் பள்ளியில் டச்சு அடிப்படையிலான ஆஃபிரிகான்ஸ் மொழியைக் கற்பிக்க 1985-ல் அரசாங்கம் எடுத்த முடிவை எதிர்த்து கண்டனம் தெரிவிக்கிறார்கள்.

சோவேட்டோ கலவரத்தில் கொல்லப்பட்ட ஒரு வெள்ளையர் சடலத்தின் மீது காவல் துறையினர் நிற்கிறார்கள். இந்த கலவரத்தில் ஆறு பேர் இறந்தார்கள்; காயமடைந்தவர்கள் நாற்பது பேருக்கு மேல் இருக்கும்.





சோவெட்டோ மெடோலேன்ட் பள்ளி மாணவர்கள் 1977-ல் அரசாங்கத்தின் ஆ்ிபிரிகான்ஸ் கொள்கையை எதிர்த்து தங்களுடைய பள்ளி புத்தகங்களை எரித்தனர். 6000 க்கும் மேற்பட்ட ஆர்ப்பாட்டக்காரர் களைக் கலைப்பதற்குக் காவல் துறையினர் கண்ணீர்ப் புகையை பயன்படுத்தினர்

ஒரு அதிகாரி என்கிற முறையில், அவர் தென் ஆப்பிரிக்க அசாரங்கம் எப்படி கருப்பர்களை நியாயமற்ற முறையில் நடத்துகிறது என்று எடுத்துசொல்ல முயன்று, சிலர் எந்த குற்றமும் சாட்டப்படாமல் நீண்ட காலமாக சிறையில் அடைக்கப்பட்டார்கள் என்பதை கூறினார். அதிகாரி டூடு இரு தரப்பினரும் தங்கள் பிரச்சினைகளை அமைதியாக தீர்க்க வேண்டும் என்று விரும்பினார். ஆனால் பல இளம் கருப்பர்கள் கோபமடைந்திருப்பதையும் அறிந்திருந்தார். எதுவும் நடக்கலாம் என்றொரு நிலை இருந்தது.

அரசாங்கம் அவர் சொன்னதைப் பொருட்படுத்தவில்லை. சோவெட்டோ பகுதியில் ஜூன் 16th, 1976-ல் கலவரம் ஏற்பட்டு 600 கருப்பர்கள் சுட்டுக் கொல்லப்பட்டனர்.

அதே வருடம் டெஸ்மன்ட் தென்னாப்பிரிக்காவின் மத்தியில் சுதந்திர முடியரசு நாடான லெசோதோவின் பாதிரியாரானார். அவர் விரும்பியிருந்தால் அந்த நாட்டின் குடிமகனாக இருந்திருக்கலாம். ஆனால் அப்படி செய்யவில்லை.

கருப்பு, வெள்ளை மாணவர்கள் இருவரும் ஜோஹன்னஸ்பர்க் நகரத்தின் இனவெறியை எதிர்த்தனர். இங்கே அவர்கள் காவல் துறையினர் தாக்குதலிலிருந்து ஓடுகிறார்கள்

.





கலவரத்தின் போது ஒரு மாணவன் காவல் துறையின் கையில் பிடிபட்டார்.

தென் ஆப்பிரிக்க அரசாங்கம் கருப்பர்களை துன்புறுத்தியதால் அவர் வேதனைபட்டாலும், அழகான தென் ஆப்பிரிக்காவை மிகவும் விரும்பினார்

பாதிரியார் டூடு 1978-ல் தென் ஆப்பிரிக்காவின் கௌன்ஸிலில் ஆஃப்ஸ் சர்ச்சஸ்–ன் பொது செயலாளராக நியமிக்கப்பட்டார். இந்த குழு சமூகத்தில் எளியவர்களுக்கு உதவுவதற்கு மிக கடினமாக உழைத்தது. இவ்வாறு அவர்கள் அரசியல் கைதிகளுக்கு உதவியது அரசாங்கத்திற்கு பிடிக்கவில்லை.

பாதிரியார் டூடு 1979-ல் செய்ததையும் அரசாங்கம் அங்கீகரிக்கவில்லை. கருப்பர்களை வளமற்ற பழங்குடி நிலங்களுக்கு இடமாற்றம் செய்தார்கள். மக்கள் பட்டினியாய் இருப்பதற்குக் காரணம் அரசாங்கம தான் என்று கூறினார்

அவர் தென் ஆப்பிரிக்காவுடன் வர்த்தகம் செய்வதை நிறுத்தும்படி அமெரிக்காவையும், ஐரோப்பிய நாடுகளையும் கேட்டுக்கொள்ள ஆரம்பித்தார். தென் ஆப்பிரிக்கா பணத்தை இழந்துவிட்டால், கருப்பர்களை அவர்கள் நடத்தும் விதம் மாறலாம்.

அவரை தண்டிப்பதற்காக அவருடைய பாஸ்போர்ட்டை அரசாங்கம் பறித்துக் கொண்டது. கொலம்பியா பல்கலைகழகத்தில் கௌரவ பட்டம் வாங்க அவர் நியூ யார்க் நகரம் போவதற்கும் அனுமதிக்கவில்லை. ஆகவே கொலம்பியாவின் தலைவர், பட்டம் வழங்க தென் ஆப்பிரிக்காவிற்கு வந்தவர், பாதிரியார் டூடு ஆப்பிரிக்கா ஒருங்கிணைக்கப்படுவதற்கான சின்னம் என்று சொன்னார்.



ஆஸ்லோவில் தான் பெற்ற அமைதிக்கான நோபெல் பரிசை பாதிரியார் டூடு காட்டுகிறார். வலதுபக்கம் அவருடைய டிப்ளோமாவை நோபெல் சமாதான பரிசு குழுவின் தலைவர், ஏஜில் ஹார்விக் பிடித்துக் கொண்டிருக்கிறார்.

ரியார் 1984-ல் நியூ யார்க் நகரத்தில் இருந்த பாலோஜிகல் கல்லூரிக்கு பிரயாணம் செய்ய ந்தது. அங்கு, அக்டோபர் 16-ந் தேதி அன்று மதிக்கான நோபெல் பரிசு குழு அவரை ந்தெடுத்திருக்கிறது என்பதை கேள்விபட்டார். ங்கப்பட்ட பரிசுடன் தந்த ஆவணத்தில் மதியான மாற்றலில் ஈடுபட்ட எல்லா தென் பிரிக்கக் கருப்பர்களையும் புகழ்ந்திருந்தது.

ற, நாம் ஜெயித்துக் கொண்டிருக்கின்றோம்" ாயம் வெல்லும்", என்று பாதிரி டூடு கூறினார்.




கலவரத்தில் இறந்த ஒருவனுக்காக துயரமடைந்த கருப்பர்கள், இறுதி சடங்கில் பேனரை தூக்கிக் கொண்டு இனவெறியை எதிர்த்து கோஷங்கள் எழுப்பினார்கள். பேனரை பிடிங்கிக் கொண்டு, காவல் துறை கூட்டத்தைக் கலைத்தது

193000$ பரிசு தொகையிலிருந்து பெருமளவு தென் ஆப்பிரிக்க மாணவர்களின் கல்விக்கு உதவி பணமாக கொடுக்கப்படும் என்றும் டூடு கூறினார்.

அவருக்கு 1984-ல் ஜோஹன்னஸ்பர்க் பாதிரியார் பதவி கிடைத்தவுடன் ஆப்பிரிக்காவின் கௌன்ஸில் ஆஃப்ஸ் சர்ச்சஸ் வேலைய ராஜினாமா செய்தார். இதற்கிடையில் கலவரங்கள், புறக்கணிப்புகள், எதிர்ப்புக்கள் தொடர்ந்தன. இரு தரப்பினரகளையும் சமாதானமாக வேலை செய்யும்படி பலமுறைகள் பாதிரி டூடு கெஞ்சினார்.

1985 ஆகஸ்ட் 6-ம் தேதி, வெகுண்ட அரசாங்கமும், கருப்பர்களும் நேருக்கு-நேர் சந்தித்ததை அவர் பார்த்தார். கருப்பர்கள் சவ அடக்கத்திற்கு சென்று கொண்டிருந்ததை அரசாங்கம் கலவரத்திற்குப் போவதாக நினைத்தது.

அரசாங்கம் கருப்பர்களுக்கு பஸ் கொடுத்தால், அவர்கள் போய் கொண்டிருக்கும் இடத்திற்கு அது கொண்டுவிட்டுவிடும்; அதனால் கலவரம் உண்டாக வாய்ப்பில்லை என்று அமைதியாக பாதிரியார் ஒரு யோசனை சொன்னார்.

கலவரத்தில் இறந்து போன மற்றுமொரு கருப்பருக்கு இறுதி சடங்குகள் தயாரித்துக் கொண்டிருக்கும் போது ஆயுதமேந்திய பாதுகாப்பு படைகள் சென்றன.





பல சமயங்களில், கருப்பர்களின் இறுதி சடங்கு ஊர்வலங்கள் அரசாங்கத்தை எதிர்த்த வன்முறை எழுச்சியாக மாறியது. 1984 முதல் 1500 பேர்கள், பெரும்பாலும் கருப்பர்கள், கொல்லப்பட்டார்கள்.

.

காவல்துறை சம்மதித்தது; இறுதி சடங்கு அமைதியாக முடிந்தது

மற்றோரு சமயம் ஒரு கருப்பர்கள் கூட்டம் காவல்துறையினர் ஒருவரை கல்லாலடித்து சாக அடிக்க முயன்றதைப் பார்த்து டூடு அவருக்கு முன் சென்று நினறு தடுத்ததால் அவருடைய உயிரைக் காப்பாற்றினார்.

தென் ஆப்பிரிக்காவின் நிலையை சமாதான வழியில் மாற்ற வேண்டும் என்பது தன் அபிப்பிராயம் என பாதிரியார் டூடு பல முறைகள் எடுத்து சொன்னார். அவர் இரு புத்தகங்கள் எழுதியிருக்கிறார்: (வியர்த்தமான பேச்சு; நம்பிக்கையும் வேதனையும் (Crying in the Wilderness; Hope and Suffering).

ஆனால் வார்த்தைகள் காவல்துறை அதிகாரியைக் காப்பாற்றாது. ஆகவே, பதிலாக அவர் தன் உயிரைப் பணயம் வைத்தார்.

அவர் ஒரு சிறிய உருவம் படைத்தவர். படிப்பதும், பாட்டு கேட்பதும், ஓடுவதும், சிரிப்பதும் அவருக்கு பிடித்தமானவை. சர்ச்சில் வருபவர்களுக்கு கதை சொல்லுவதில் அவருக்கு தனி விருப்பம்.. பைபிலில் வரும் Exodus என்கிற கதை அவருக்கு மிகவும் பிடித்தமான ஒன்று. அதில் ஈஜிப்பில் அடிமைகளாக இருந்த ஜனங்களை கடவுள் விடுதலை செய்தார்



காவல் துறையின் உளவு என்று சந்தேகப்பட்ட ஒருவரை, வெகுண்ட கருப்பர் கும்பல் தாக்கிக் கொண்ண்டிருந்த கூட்டதிற்குள் பாதிரி டூடு புகுந்தார். அடிப்பதை நிறுத்தச் சொல்லி கலகக்காரர்களைப் பார்த்து கத்தினார். அந்த மனிதனை ஆருகில் இருந்த வாகனத்திற்கு எடுத்து செல்ல ஆணையிட்டார். “நிச்சியமாக அந்த மனிதனின் உயிரை டூடு காப்பாற்றினார்” என்று ஒரு நிருபர் எழுதினார்.

மனிதன் சுதந்திரமாக் இருக்க வேண்டும் என்பது  இன்றும் கடவுள் விருப்பம் என பாதிரியார் டூடு நம்பினார். நிற பேதமில்லாமல், யாவருக்கும் சுதந்திரம் கொடுக்க கடவுள் இந்த உலகதத்திற்கு வந்தார் என்பதால் தென் அமெரிக்க கருப்பர்களுக்காக தான் இவ்வளவு பாடுபடுவதாகக் கூறினார்.

இடது பக்கத்தில் இருக்கும், கோரெடெல்லா ஸ்காட் கிங் 1986-ல் அமைதிக்கான மார்டின் லூதர் கிங் பரிசை பாதிரியார் டூடுவிற்கு வழங்கினார். நடுவில் இருக்கும் மார்டின் லூதர் கிங்கின் சகோதரி, கிறிஸ்டினா கிங் ஃபாரிஸ் மற்றும் வலது பக்கத்தில் இருக்கும் டூடுவின் புதல்வி ம்ஃபோ ஆகியவர்களும் எபநேசர் பேப்டிஸ்ட் சர்ச்சில் நடந்த இந்த நிகழ்ச்சியில் பங்கு கொண்டார்கள்.







எங்கெங்கு, எப்பெப்போது வாய்ப்பு கிடைத்தாலும் டுடு அங்கு நிறவெறியைப்பற்றி பேசுவார்.

.இது எளிதான வேலையில்லை; ஆபத்தும் உண்டு. ஆனால் தான் பயப்படவில்லை என்றும், இதை தான் செய்ய வேண்டும் என்று கடவுள் விரும்புவதால் அரசாங்கம் அவரை நிறுத்த முடியாது என்றும் அவர் சொல்லுவார்.

“என்னால் இதை தவிர்க்க முடியாது” என்று அவர் எழுதினார். ”அநியாயாம் நடப்பதைப் பார்த்துக் கொண்டு என்னால் சும்மா இருக்க முடியாது ............ மிஞ்சி போனால் அவர்களால் செய்யக் கூடியது என்னை கொலை செய்வது; மரணம் என்பது மோசம் என ஒரு கிறிஸ்துவர் நினைப்பதில்லை.”

# டெஸ்மன்ட் இம்பிலோ டுடு

1931 அக்டோபர் ட்ரான்ஸ்வால்-ல் கெர்க்ஸ்டோர்ப் என்ற ஊரில் ஸகாரியாவிற்கும் அலெட்டா டுடுவிற்கும் பிறந்தார்.
1950 ஜோஹானஸ்பர்க்-ல் மட்பேன் உயர்நிலை பள்ளிபடிப்பை முடித்தார்.
1953 பிரிட்டோரியா புன்டு நார்மல் கல்லூரயிலிருந்து ஆசிரியர்கள் டிப்ளோமா பெற்றார்.
1954 தென்னாப்பிரிக்க பல்கலைக்கழகத்தில் பேச்லர்ஆஃப் பட்டம் பெற்றார்.
1954-55 மட்பேன் பள்ளியில் ஆசிரியராக இருந்தார்
1955 லியா நோமலிஸாவை திருமணம் செய்து கொண்டார்.
1955-57 கெர்க்ஸ்டோர்ப்-ல் இருந்த முன்ஸ்வீல் உயர்நிலை பள்ளியில் ஆசிரியராக இருந்தார்.
1958-60 ஜோஹானஸ்பர்க்-ல் இருந்த ஸீயின்ட் பீட்டர் தியோலோஜிகல் ஸீமினரி –ல் படித்தார் .
1961 ஆங்க்கிலிகன் சர்ச்சின் பாதிரியராக நியமிக்கப்பட்டார்.
1965 லன்டன் கிங்ஸ் கல்லூரியில் பேச்லர் ஆஃப் டிவினிடி பட்டம் பெற்றார்.
1966 லன்டன் கிங்ஸ் கல்லூரியில் மாஸ்டர் ஆஃப் தியோலொஜி பட்டம் பெற்றார்.
1967-69 தென் ஆப்பிரிக்காவின் ஃபெடரல் தியோலொஜிகல் செமினரியில் ஆசிரியராக பணிபுரிந்தார்.
1969-71 லெஸோதொ நேஷனல் பல்கலைகழகத்தில் ஆசிரியர் பதவி வகித்தார்.
1972-75 தியோலொஜிகல் கல்வி நிதியின் இணை இயக்குனராக பனியாற்றினார்.
1975 ஜோஹன்னஸ்பர்கின் ஆஞ்சிலிகன் குருவாக இருந்தார்.
1976 லெஸோதொவின பாதிரியாராக இருந்தார்.
1978-84 தென் ஆப்பிரிக்காவின் கௌன்ஸில் ஆஃப்ஸ் சர்சஸ்–ன் செயலாளராக நியமிக்கப்பட்டார். அமைதிக்ககான நொபெல் பரிசு பெற்றார்; ஜோஹானஸ்பர்கின் பாதிரியானார்.
1986 கேப்டௌனின் அஞ்சிலிகன் பிரதான் குருவாக பதவி ஏற்றார்.